Registered No. M. 1823.

உ

சிவமயம்.

"KUMARAN".

# குமரன்



"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

(வாரப் பதிப்பு.)

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.

"ஆலயந் தொழுவது சாலவு நன்று"

"திரைகட லோடியுந் திரவியந் தேடு"

ஆரம் க. } காரைக்குடி, உருத்திரோற்காரிஸூ தைமீ உசஉ (6-2-24) { முத்து உ

## பிரிந்துபோதல் கூடும்.

நெடுங்காலமாக ஒற்றுமையாக
வாழ்ந்துவந்த நமது சமூகம் இது
காலை பலவாகப் பிரிந்து போகு
மோ வென்ற ஐயந்தோன்றுகி
றது. ஒரு சமூகம் ஒற்றுமையாக
வாழ்வதற்குச் சிலசாதனங்கள் அவ
சியமாகும். அவைகள் இதுபோழ்து
செவ்வையாக விருக்கவில்லை. இன்பத்
திலும் துன்பத்திலும் ஒருவருடனொருவர்
கலந்திருத்தல்; கஷ்டமுண்டான காலத்
தில் உதவிபுரிதல்; தங்கள் வாழ்க்கையி
லுள்ள கஷ்டங்களைப் பொதுக் கூட்டங்
கூடி அதன்மூலம் தீர்மானித்து நடத்தல்;
தவறு செய்பவர்களை ஒறுத்தல்; பிற
ரால் துன்பமுறும் போது யாவரும் பிளவு
படாமல் ஒன்றுகூடி யெதிர்த்தல் முத
லிய அருங்குணங்கள் நம்மவரிடையில்
நின்றந்திருந்த படியால்தான் இந்த சமூக
மானது பிறர் புகழ்ந்தோதும் படியான
பெருமையைப் பெற்றிருக்கிறது. சென்
ற சில வருடங்களாகக் கவனிப்பாரின்
றிச் சமூகம் சிதைவுற்று வருகின்றது.
இப்பொழுது ஒருவருக்குத் துன்பமுண்டா
குமென்று தெரிந்தால் அதனை அதிகப்ப
டுத்தவும் சிலர் வழிதேடுகின்றனர்; வாழ்
க்கையில் துன்பமுண்டாகுமானால் அத
னைத் தனக்குத்தானே தீர்த்துக்கொள்ள
முயல்வதோடு அதேமாதிரித் துன்பம் பிற
ருக்கும் வருமாறு முயற்சிப்பவர்களு மிருக்
கின்றனர். பிறஜாதியினருக்கு உதவிபுரி
ந்து நம்மவருக்குத் துன்பமுண்டாகுமாறு
செய்யும்படி செய்கின்றவரு மிருக்கின்ற
னர். 'நமது ஜாதியார்' என்ற அபி
மானம் வரவரக் குன்றி பொறாமையும்
வன்மமும் மலிந்து வருகின்றன. பொ
துக் கூட்டத்தைச் சிதைக்கப் பலர் தயா
ராயிருக்கின்றனரே யன்றி அதனைச்
செவ்வைப்படுத்திக் கூட்டவேண்டுமெ
ன்று கருதுவார் மலிந்திருக்கவில்லை.
பொதுக்கூட்டங்களால் பெரும் நன்மை
கள் உண்டாகும் என்று நன்கு உணர்ந்த
வர்கள்கூடத் தாங்கள் கட்டுக்கடங்
காமல் திரியவேண்டுமென்ற எண்ணத்
தால் அதனை வெறுக்கின்றனர். தவறு
செய்பவர்களைத் தண்டிக்கமுயலும்போது
அவர்கட்கு உதவி புரியவரும் பலராகவிரு
க்கின்றனர். தீமைக்கு உதவிபுரிதல்
பெரும்பாவ மென்பதையும், முளையிலே
யே தவறுகளைக் கண்டித்தாலல்லது
சமூக வாழ்க்கை செப்ப முறாதென்பதை
யு முணராமல் தங்கட்குக் கிடைக்கும்
அற்ப நன்மையின் பொருட்டோ, அல்
லது நேசத்தின் பொருட்டோ சமூ
கத்திற்குண்டாகும் பெருநலங்களையும்
கெடுத்துவிடுவதை நேரே பார்க்கிறோம்.
வேறு ஜாதியாருடன் சில சிறு போகங்
களை முன்னிட்டுக் கூடிக்கொண்டு நம்ம
வரின் கௌரவத்தைப் பலர் கெடுத்து
வருகின்றனர். ஏனைய ஜாதியிற் பிறந்து
காற்காசு கூடச் சம்பாதிக்க வறியாதிருக்
கும் பலர் நம்முடைய சமூகத்தார், பெண்
டுபிள்ளைகளையும் மாடு மனையையும்
விட்டுத் தீவாந்தரஞ் சென்று சம்பாதிக்
கும் பொருளைப் பெற்று ராஜவாழ்க்கை
வாழ்வ தொருபுறமிருக்க, அவர்கள் நம்மு
டைய குடும்பத்தினுள் செய்துவிடும் கல
கங்களும் ஒருவரோடு கூடிக்கொண்டு
மற்றவரைக் கோர்ட்டுக் கிழுப்பதும் பிற
வுங் கூறமுடியாதனவாகும். உடன்பிற
ந்தவர்களோடு வன்மம் பாராட்டிப்பிற
ஜாதியாரிடம் நட்புரிமைகொண்டு சமூ
கத்தின் மானத்தைக் குலைக்கும்படியான
வேறு பல காரியங்களைச் செய்பவரும்
நமது சமூகத்தில் மலிந்து வருகின்றனர்.

கலியாணமோ நடக்கவில்லை. கோவில்
கட்டிக் கும்பாபிஷேகம் செய்வதைவிடக்
கடினமாகிவிட்டது கலியாண விஷயம்!
குடும்பச் செலவோ தாங்கமுடியவில்லை,
விசேஷகாலங்கள் நெருங்கிவருகிறதென்
றல் சந்நியாசம் வாங்கிக்கொள்ள
லாமாவென்று பலர் கருதுகின்ற
னர். நடுத்தரக் குடும்பத்திற் பிற
ந்தவரின் ஆயுள்காலத்தில் பெரு
ம்பாகம் வெளிநாட்டில்தான் வசி
க்கவேண்டியிருக்கிறது. அப்படிவசி
த்துப் பணத்தை வாரிக்கொண்டு
வந்தாலும் இன்பமென்பது ஏட்டில்
படித்தால்தான் கிட்டும். வீட்டில் நுழை
ந்தால் எப்பொழுது வெளியேறுவதென்ற
எண்ணமே பலரையும் வாட்டுகின்றது.
பொதுவாகச் சமூகத்தின் கஷ்டங்களதிக
ரித்துவிட்டன. பொறுக்கமுடியவில்லை.
ஆகவே தனித்தனியாகச் சீர்திருந்துவதே
நலமென்று ஒவ்வொருவருங் கருத ஆரம்
பித்துவிட்டனர். கலியாணமின்றி வா
லிபர்கள் இருக்கமுடியாது. வாலிபர்க
ட்கு எளிதில் கலியாண முடியாதிருக்கு
மானால் அவர்கள் செய்யக்கூடியன இர
ண்டு. ஒன்று வேறுஜாதிப் பெண்களை
உடன்படுத்திக்கொள்தல்; மற்றொன்று
வியபிசாரஞ் செய்தல். இவ்விரண்டுமின்
றித் தவம்புரிவோர் நூற்றிலொருவரிரு
வரேயிருப்பர். இதனால், வியபிசாரஞ்
செய்துழல்வதை விட எங்கிருந்தாவது
ஒரு மாதைச் சாஸ்வதமாகக் கொள்ள
லாமென்ற எண்ணம் தவறாகுமோ
தென்பதற்குச் சில அறிகுறிகள் தோற்று
கின்றன. பர்மாவில் சிலர் இம்முறை
யில் தவறுப்பட்டிருக்கின்றனரென் றறி
கிறோம். இங்காட்டிலும் ஆங்காங்கே நிக
ழ்வதால் கலப்புச் சமூகமொன்று தோன்
றுகின்றது. இம்மாதிரியாகப் பிரியுமா
னால் யானையுண்ட விளங்கனிபோல்
மேற்போர்வையாக நமது சமூகப் பெயரி
ருக்க, உள்ளீடில்லாத போய்விடுமோ
யென்றஞ்சவேண்டும். சமூகம் ஒன்றாகவி
ருக்குமானால் எல்லாரும் ஒன்றுகூடி யோ
சித்து ஒரே முடிவுசெய்து அவ்வழியில்
வாழ முயலவேண்டும். தனித்தனியாகப்
பிரிந்து மனம் போனபடி நீதத்தங்களைச்
செய்வதென்று ஆரம்பித்தால் சமூகம்
பிளவுபட்டுச் சிதைந்துபோகும். உல
கெங்கும் கீர்த்திபெற்று விளங்கும் இந்த

## நாம் தற்காலம் ஆராய வேண்டிய பொருள்.

—:000:—

(சென்ற வாரத் தொடர்ச்சி.)

மற்றும் அவர்கள், உயர்ந்த வகுப்பாரைத் தூஷிப்பதற்குப் பதிலாக, அவர்களை உண்மையாக உயர்ந்த நிலைக்குக் கொண்டு வரக்கூடிய கல்வியறிவைப் பெறுதற்கு முயலுதல் வேண்டும். அவர்கள் தங்கள்சொந்த உரிமைகளை நிலைபெறுத்திக்கொள்வார்களாக. அவர்களைத் தாழ்த்துவோரது வைராக்கியங்களெல்லாம் தாமே ஒழிந்துபோம். உயர்ந்தவகுப்பாரும் அன்னோர் பால் அன்பு கொண்டு செய்ய வேண்டிய கடமை ஒன்றுளது. அவர்கள் உண்மையாகத் தாம் பெரிதும் உயர்வுடையவர்கள் என்று எண்ணினால், அவ்வுயர்வைப் பொதுஜனங்களுக்கு நிரூபணஞ் செய்துகாட்டுதல் வேண்டும்.

இது போழ்து அவ்வாறு செய்யவேண்டியது அவர்களுடைய முக்கிய கடமையாகும். ஏனெனில் அவர்கள், தாம் தாழ்ந்த வகுப்பாருடைய துன்பத்தினால் பாதிக்கப்படக்கூடாது என்னும் சுயநலத்தோடு தம்மைக் காத்துக்கொள்ள நினைத்தல் கூடாது. அப்படியல்ல. ஆனால் அவர்கள் அப்படி எண்ணுவார்களானால் அவர்கள் தற்காலநிலையை நன்றாக உணராதவர்கள் என்றே சொல்லுதல் வேண்டும். முன்னரேயே அதிகார பலமுள்ள நாகரிக உலகத்திற்கு நேரே இந்தியர்களாகிய நாம் அநாகரிக முள்ளவர்களாகவே பாவிக்கப்படுகிறோம். இது கல்வியின் மிக்க மேற்றிசையினர் அனைவரும் பொதுவாக ஒப்புக் கொள்ளும் உண்மையாக விளங்குகிறது. இந்தியா வகுப்பு உரிமைகளைக் கவனியாது விட்டதனால் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் பயன் மேற் கூறிய தப்பெண்ணந்தான். ஆனால் இன்னும் நம்முடைய கண்கள் திறக்கப்படவில்லையே. இன்னும் நாம் பிராமணர்களைத் தவிர மற்றவர்களுக்கு நம்முடைய வேதங்களைப் படிப்பதற்குத் திறமையில்லை யென்னும் தீர்மானத்திலேயே யிருக்கிறோம். மேலும் மக்களுடைய உரிமைப் பொருளாகவுள்ள அவ்வேதங்கள் யாவரும் வாசிக்கத் தக்கனவல்ல வென்றும் கூறிக் கொண்டிருக்கிறோம். இதெல்லாம் பழைய நாளை சமாசாரங்களாகும். பிறப்பிற்காகத் தனியான கௌரவங்களை இந்நாளிற் பெற வியலாது. ஒரு மரத்தின் குணத்தை அதன் பழங்களால் உணரலாம். தாழ்ந்த வகுப்பாரில் ஒருவர் புத்திரன் உயர்ந்த பிராமண சமூகத்தைச் சேர்ந்தவர்களுடைய புத்திரர்களைக் காட்டிலும் கல்வியறிவில் மேம்பட்டவனாக விருப்பானானால், உயர்ந்த வகுப்பார் அநுபவிக்கும் எல்லா உரிமைகளையும் தாராளமாக அவனுக்கு வழங்க வேண்டுவது ஒரு நல்ல சமூகத்தின் அடையாளமாகும். நம்முடைய ஹிருதயத்தில் சுய நல எண்ணமும் நான் எனும் அகங்காரமும் குடிகொண்டிருக்கும் வரையில், கடவுள் நம்மைக் கண் காணிக்கமாட்டார் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுதல் வேண்டும். நாம் மனிதரை ஏமாற்றி விடலாம். ஆனால் ஒரு காலத்தும் கடவுளை ஏமாற்ற முடியாது. சமூக சம்பந்தமான விஷயங்களில் மட்டும் அல்ல சமய சம்பந்தமான விஷயங்களிலும் தாழ்ந்த வகுப்பார் பஹிஷ்கரிக்கப்படுகின்றார்கள். கடவுள் உலகத்துமக்களுக்கெல்லாம் தந்தையாக இருக்கிறார் என்று எண்ணமுடியாது. ஆனால் அவர் வைதிகர்களுடைய சொந்தப் பொருள் என்று தான் எண்ணமுடியும். அவ்வைதிகர்கள் கடவுள் கூடப், பிறப்பு நிலைமை என்னும் இவ்வாடம்பரங்களால் ஏமாறி விடுவார் என்று எண்ணுகிறார்கள் போலும். உரிமையுள்ள உயர்ந்த வகுப்பார் இவ்வாடம்பரத்தை ஒரு வியாபாரமாகக் கருதினால், அவர்கள் சமயத்தை விட்டு விட்டு வேறு வழிகளில் வியாபாரம் புரியட்டும். இனிமேல் அவர்கள் உலகத்து மக்களுக்கெல்லாம் தந்தையாராக விளங்கும் இறைவன் எழுந்தருளி இருக்கும் கோயிலின் கதவுகளைச் சாத்திப் பூட்டி வைத்துக் கொள்ள வேண்டாம். எல்லோரும் நன்றாக அவரைத் தெரிசிக்கட்டும். உலகத்திலே தாராளபுத்தியென்பது குறைந்துதானிருக்கிறது. ஆயினும் நம்முடைய உயர்ந்த வகுப்புச் சகோதரர்கள் இனிமேல் தாராளபுத்தியை விருத்திசெய்யாதிருக்கக்கூடாது. இன்றேல் நிகழ்கால இடையூறுகளால் சமயம் குன்றுவதோடு அவர்களும் குன்றித்தான் போக நேரிடும். இப்பொழுது சுயநலமற்ற தொண்டர்கள் பலர் வேண்டும். அகத்திலும் புறத்திலும் பரித்தியாக குணம் அவர்களுக்கு அமைந்திருத்தல் வேண்டும். அவர்கள், பிறப்புயர்வு, நிலைமையின் சிறப்பு முதலியவைகளைக் கனவிலும் கருதக் கூடாது. பெரிதும் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் தங்களுடைய சகோதரர்களாகிய தாழ்ந்த வகுப்பாரை உயர்த்துவதற்குப் பாடுபடுவதே அவர்களுடைய முக்கிய நோக்கமாக இருத்தல் வேண்டும். மற்றும் அவர்கள் தங்களுடைய நடவடிக்கைகளினால், தாழ்ந்த வகுப்பார் தாமாகத் தம் காரியங்களைப் பார்த்துக் கொள்ளும்படி கற்பித்தல் வேண்டும். யுக்தி அனுபவ வகைகளால் அவர்களுக்குக் கல்வியைப் புகட்டக்கூடியவர்களாக இருக்கவேண்டும். பஞ்சம் நோய் முதலியவைகளிலிருந்து அவர்களைக் காப்பாற்றுதல் வேண்டும். எல்லாவற்றிற்கும் பொதுவாக இன்பதுன்பம் இரண்டினும் அத்தொண்டர்கள் அவர்களோடு கலந்து பழகுதல் வேண்டும். ஒவ்வொரு நகரத்திலும் ஒவ்வொரு கிராமத்திலும் இத்தகைய வீரர்களையே நாங்கள் வேண்டுகிறோம். எண்ணிக்கையில் அதிகமான பேர் வேண்டுமென்பதில்லை. உண்மையாக உழைப்போர் ஒரு சிலர் இருந்தாற் போதும். ஆரம்பத்தில் அவர்கள் சிறுமுயற்சி செய்யட்டும். ஆனால் பேசுவதற்கு முன்னர் செய்கையில்காட்டுவார்களாக. மெதுவாக அவர்களைப் பின்பற்றப் பல அன்பர்கள் முன்வருவார்கள். தன் முயற்சியே அவர்களுடைய மந்திர மொழியாக இருக்கவேண்டும். கடவுளிடத்தும் தம்மிடத்தும் நம்பிக்கை கொள்ளுவார்களாக. சிறப்பாக அஞ்ஞானத்தால் மூடப்பட்டிருக்கும் மக்களை யெல்லாம் ஞானஒளியோடு இலங்கும்படி செய்தல் வேண்டும்.

வாசீசபக்தன்.

---

தரும சமூகம் கட்டவிழ்ந்து நிற்கிறது. சேர்த்து இறுக்கிக் கட்டப்படுமானால் உலகிற் சிறந்து விளங்கும்! இந்தியநாட்டுக்குப் பல அருந்தொண்டினை இச்சமூகத் தாரிடையிருந் தெதிர்பார்க்கலாம். சைவப்பயிர் தழையும் இது கட்டுப்படாமல் பல கூறுகப் பிரியுமானால் ஒரு சிறு மதிப்புக்கூடக் கிடைக்கப்போவதில்லை யென்பது திண்ணம்.

முரு.

---

மேதினியுள் மிக்கபுகழ்
மேவலெனின் சொல்வதுபோல்
சாதியினு லும்செல்வத்
தாலுமுள தாழ்வுயர்வு
வீதலடைந் தொற்றுமையால்
மேம்படுபூ வாழ்க்கையையெப்
போதடியேம் கண்டுமனப்
புண்ணாறி யுய்குதுமே.

மு. கிருஷ்ணசர்மா.

---

### நோட்டீஸ்.

இதனால் சகலர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால் 1924-௵ ஜனவரி௴ 22௳யில் காரைக்குடியிலிருக்கும் அருணாசலஅம்பலம் மகன் சிதம்பரம் அம்பலம் என்னிடம் ரூ. 500-க்கு பிரதிப் பிரயோசனமில்லாமல் மோசடியாய் எழுதிவாங்கி யிருக்கிற பிராமிசரி நோட்டை ஒருவரும் மேற்படியார்வகையறா வாங்கப்படாது. மேற்படி நோட்டு என்னைக் கட்டுப்படுத்தாது.

காரைக்குடி 26-1-24. } ந. மாழண்டி ஆசாரி.



## செய்தித் திரட்டு.

ஜெர்மனியில் ௫0 லக்ஷம் பேர் வேலையில்லாது வருந்துகிறார்களாம்.

* *

தூத்துக்குடியில் பிளேக் வரவர அதிகரித்து வருகிறது.

* *

ஜெர்மனியில் ௫-லக்ஷம் ராட்டினங்கள் சுழன்றுகொண்டிருக்கின்றன.

* *

ஸீக்கியர்கள் சத்யாக்ரகத்தைத்தீவிரமாக நடாத்திவருகிறார்கள்.

* *

இங்கிலாந்தில் ராட்டினத் தொழிலைக்கிராமங்களில் விர்த்திசெய்ய ஏற்பாடுகள் நடை பெறுகின்றன.

* *

பிரான்ஸ் நாணயமாகிய பிராங்க் இப்பொழுது மதிப்பில் குறைந்து வருகிறது.

* *

மகாத்மாவின் தேகநிலை சௌக்கியமாக இருக்கிறது. காயம் முற்றிலும் ஆறிவிட்டது.

* *

மதுரை சோழவந்தான் முதலியஇடங்களில் பிளேக் நோய் பரவிவருவதாகத் தெரிகிறது.

* *

இந்தியாவின் உதவிமந்திரியாக நியமிக்கப்பட்டிருக்கும் ரிச்சர்ட்ஸ் மதுவிலக்குக்குப் பாடுபடுபவராம்.

* *

திருநெல்வேலி வெள்ளக்கஷ்ட நிவாரணநிதிக்கு இதுவரையில் ௯௯௯௨-ரூபாய்கள் சேர்ந்திருக்கின்றன.

* *

மஹாயுத்த காலத்தில் ஜனாதிபதியாக விருந்த டாக்டர் வில்சன் காலஞ்சென்றுவிட்டார்.

* *

அமெரிக்க உலக யாத்திரிகர்கள் சஙு0-பேர் ஜப்பான் சீனா முதலியவிடங்களுக்குச் சென்று விட்டு இப்பொழுது கல்கத்தாவுக்குவந்திருக்கிறார்கள்.

* *

லார்டு வில்லிங்டனுக்கு, “ பிரீடம் ஆப் பரோ ” என்ற பட்டத்தை ஹேஸ்டிங்க்ஸ் நகர சபையினர் அளிப்பதாகத் தீர்மானித்திருக்கிறார்கள்.

* *

பம்பாயில் சுங ஆலைகள் மூடப்பட்டிருக்கின்றன. ஒன்றரை லக்ஷம், தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்திருக்கிறார்கள்.

ராவ்பஹதூர் எஸ். குமாரசாமி ரெட்டியார் திருநெல்வேலி ஜில்லாபோர்டு அக்கிராசனராகத்தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

* *

அடுத்த வங்காள சட்ட சபையில் மந்திரிகளிடத்து நம்பிக்கையில்லை யெனும் தீர்மானம் ஸ்ரீமாந் ஜே. என். குப்தாவால் கொண்டுவரப்படும் என்று தெரிகிறது.

* *

சென்னை எஸ். பி. ஸி. ஏ. சங்கத்தின் வருடாந்தர மிருகக்காட்சி சென்ற சனிக்கிழமை யன்று மவுண்ட் ரோட்டிலுள்ள ஜிம்கானாமைதானத்தில் சிறப்பாக நடைபெற்றது.

* *

வரி செலுத்துவோரது விருப்பத்தைக் கவர்ன்மெண்டார் அவமதித்தே வந்தால் முடிவில் சட்டமறுப்பை ஆரம்பிக்க வேண்டியதுதான் என்று ஸி. ஆர். தாஸ் கூறுகிறார்.

* *

ஜப்பானிய பார்லிமெண்டு யாதொரு முன்னறிவிப்பு மில்லாமல் கலைக்கப்பட்டிருக்கிறது. நம்பிக்கையில்லைத் தீர்மானம் நிறைவேற்றப் படலாமென்று பிரதம மந்திரி நினைத்ததாகத் தெரிகிறது.

* *

பல ஜாதியினருக்கும் தனித்தனியே இடங்களைப் பிரித்து வைப்பதைப் பற்றிய மசோதா அமுலுக்கு வருமானால் சட்டமறுப்பு ஆரம்பிக்க வேண்டுமென்று நேடால் இந்தியர்கள் யோசனை செய்திருக்கிறார்கள்.

* *

மதுரைஜில்லா மேலூர்தாலுகாவிலுள்ள நிலச்சுவான்தார்கள் ஒருகூட்டம்கூடி, அடுத்த சென்னைச்சட்டசபையில் கொண்டுவரப் போகவிருக்கும் நீர்ப்பாசன மசோதாவைப்பற்றி ஒரு கண்டனம் செய்திருக்கிறார்கள்.

* *

டில்லியில் பிப்ரவரி ௪-ஆந் தேதியன்று அகில இந்திய சட்டசபை யங்கத்தினர்களின் மகாநாடு இனிது நடைபெற்றது. ஸ்ரீமான் ஸி. ஆர். தாஸ். அக்ராசனம் வகித்தார். பல விஷயங்கள் யோஜிக்கப்பட்டிருக்கின்றன.

* *

சென்னையிலுள்ள போலீஸ் உத்யோகஸ்தர்கள் ஒழிந்த நேரங்களில் உல்லாசமாகக் காலங்கழிப்பதற்காகப், புதுப்பேட்டை மைதானத்தில் க௩000 ரூபாய்கள் செலவு செய்யப்பட்டுக் கட்டப்பட்ட கிளப் சென்றதிங்கட்கிழமை கவர்னர் மனைவியால் திறக்கப்பட்டது.

டில்லியில் பிப்ரவரி௴ கஅஉ கூடும் ராஜாங்கசபையில், இந்தியாவில்வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழித்துவிடுதற்குரிய முறைகளைக் கையாள வேண்டுமென்று ஸ்ரீமாந் கே. வி. ரங்கசுவாமி ஐயங்கார் ஒரு தீர்மானம் கொண்டுவருவாராம்.

* *

திருவொற்றியூர்ப் பூஜை [illegible] மாசி மாதம் ௨உ ஆரம்பமாகி அஉ முடிவடைகிறது.

* *

தேகஆரோக்கியத்திற்குரிய ஓரிடத்திற்கு அநேகமாக கண்டாலாவுக்கு மஹாத்மா இனிமேல் செல்லுதல் கூடும் என்று தெரிகிறது.

* *

தஞ்சை ஜில்லாவில் வரிகொடா இயக்கம் நடந்து கொண்டிருக்கிறது. பல இடங்களில் ஜப்திகள் செய்யப்பட்டிருக்கின்றன. முன்னர் அறிக்கைக்கடிதம் வெளியிட்ட மிராசுதார் சங்கத்தார், அறிக்கையின் ௩-து தீர்மானத்தை வாபஸ்வாங்கிக்கொள்ளுவதாகத் தீர்மானித்திருக்கிறார்கள்.

* *

சிங்கப்பூரில் மஹாத்மாவின் தேகசௌக்கியங்குறித்துப்பிரார்த்தனை ஹிந்து தேவாலயங்களில் நகரத்தாரால் வழிபாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. நகரச்சிவன்கோவிலில் சுப்பிரமணியருக்கு உஉ நாட்கள் ருத்திரஜெபமும் சகஸ்தர நாமார்ச்சனையும் நடைபெற்று வருகின்றன.

* *

பர்மாவில் வடக்கு ஷான் சமஸ்தானத்தில், காலாவுக்கு சமீபத்திலுள்ள ஹீகோவில் புதிதாக ஒரு சுரங்கம் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. அதில் வெள்ளியும் ஈயமும் ஏராளமாக இருக்கின்றன. முன்னரேயே பர்மா தேசமானது, தெற்கு ஷான் சமஸ்தானத்தில் தனக்குரிமையாகக் கொண்டுள்ள, வெள்ளி, ஈயம் இவைகள் நிறைந்த சுரங்கங்களால் மிகவும் பிரசித்தி பெற்றிருக்கிறது என்று இண்டஸ்ட்ரி பத்திரிகை எழுதுகிறது.

* *

பிட்சர் ஸர்விஸ்கார் தஞ்சாவூரிலிருந்து புதுக்கோட்டைக்கு வரும் பொழுது வழியில், கண்டாகோட்டையில் ஒரு பிராமண மாதின்பேரில் ஏறிவிட்டதாம். அதனால் அம்மாது உயிர்துறந்தனராம். மற்றும் திருக்கோகர்ணத்திற் கருகில் இரண்டு குழந்தைகளின் பேரில் அதே கம்பெனியின் மற்றொருகார் ஏறியதால் அவ்விரு குழந்தைகளும் மோட்டார் இயமனுக்கு இரையாயினவாம். வேகமாக ஓட்டியதே காரணம். டிரைவர்களின் கவலையீனம் எப்பொழுது ஒழியுமோ தெரியவில்லை.



சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்தனைப் போதும் மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே.

—அருணகிரிநாதர்.

குமரன் காரைக்குடி.
ருத்திரோற்காரிஞு தைமீ உசஉ.

## நேற்று விடுதலை பெற்றார்.



வாழ்கநீ! எம்மான், இந்த வையத்து நாட்டி லெல்லாந்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி, விடுதலை தவறிக் கெட்டுப்
பாழ்பட்டு நின்ற தாமோர் பாரத தேசந் தன்னை
வாழ்விக்க வந்த காந்தி மஹாத்ம! நீ வாழ்க ; வாழ்க!

## காந்தி யெம்பெருமான் விடுதலை பெற்றார்.

நமது பாரத மாதாவின் விடுதலை
யின் பொருட்டு இரவு பகலாக
உழைத்து, அன்புநிறைந்த அர
சாங்கத்தாரின் விருந்தினராக எர
வாடாச் சிறைக்கோட்டம் நண்ணி
அவண் ஏறக்குறைய ஈராண்டுகள்
உறைந்து, சின்னாட்கட்கு முன்
நோய் வாய்ப்பட்டு இதுகாலை பூனா
சாஸூன் ஆஸ்பத்திரியில்சத்திரமி
டப்பெற்றுச் சௌக்கியமாக வதி
யும் காந்தியெம்பெருமான்—அஹி
ம்சா தர்மோபதேச குருமூர்த்தி—
அறக்கடவுள்—தன்னலங் கருதா
நின்மலர் நேற்று விடுதலையடை
ந்தார் என்ற செய்தியை நேயர்க
ளுக்கு மிக்க மனமகிழ்வோடு தெ
ரிவிக்கின்றோம். ஆகவே அடிகளு
க்கு, இயல்பாகவிதிக்கப்பட்டஆறு
வருடங்களுள்பாக்கியாகவுள்ள நா
ன்கு வருடங்களும்நீக்கப்பட்டிருக்
கின்றனஎன்பது போதருகின்றது.
ஆறு வருடங்கள் நடாத்த எண்
ணிய விருந்தை அரசாங்கத்தார்
இரண்டாண்டுகட்குள் முடித்துவி
ட்டார்கள் என்பது இனிது புலப்
படும். இதுகாலை அடிகளும் அன்
பர் பலரும் சிறையினின்றும்
விடுதலை யடைந்துவிட்ட போழ்
தினும், நமது அன்னை பாரத
தேவி விடுதலை பெற்ற பொழுதே
யாவரும் விடுதலை யடைந்தவர்க
ளாவார்கள். இப்பொழுது நாம்
எல்லோரும் நம் இல்லங்களிலே
யே உறைந்து கொண்டிருந்தாலும்
சிறையிலேதான் உறைந்துகொண்
டிருக்கின்றோம். நாம் பூரணசுத
ந்தரம் பெற்ற ஞான்றே சிறையி
னின்றும் நீங்கப் பெற்றவர்களா
வோம். நமது அன்னையும் ஆனந்த
தாண்டவம் புரிவாள். இப்பொ
ழுது நம் தாயின் கால்களிலே பூட்
டப்பட்டிருக்கும் தளைகளைத் தறி
த்துவிட்டு வீரக்கழல்களைப் புனைத
ற்கு முயலவேண்டுவதே நமது மு
தற்பெருங் கடமையாகும்.எனவே
எல்லோரும்இனிமேல்நன்குபாடுப
டுதல் வேண்டும். பூவோடு சே
ர்ந்த நாரும் மணம் பெறும் என்
பதுபோல் அடிகள் தவஞ்செய்தற்
குத்தவம்புரிந்தஎரவாடாச்சிறைக்
கோட்டமும், அன்னார்க்கு வை
த்தியம் செய்து வண்புக ழெய்து
தற் குரித்தாய் இலங்கும் கர்னல்
மாடக்கும் பெருமாண்பு பெற்றுவி
ட்டனர் என்பது மிகையாகாது.
அடிகள் அருளிய திட்டங்களை
நிறைவேற்றும் வகையால் அன்னா
ரை விடுவித்து இன்பவிழாக்கொ
ண்டாடவேண்டிய நாம், அதனை
அறவே மறந்து அயர்ந்து
உறங்கிக் கொண்டு, "அடிகளை
எப்பொழுது அரசாங்கத்தார் வெ
ளியே விடுவார்கள்" என்று வெ
ட்கமின்றிக் கனவு கண்டுகொண்டு
அரசாங்கத்தாரால் விடுவிக்கப்பெ
ற்றபொழுது ஆனந்த விழாவெடு
ப்பது அவ்வளவு பொருத்தமுடை
யதாகாது. இனிமேல் அடிகள்
நம்மை, "இந்த இரண்டாண்டுக
ளும் என்னவேலை செய்தீர்கள்?
நிர்மாணத் திட்டங்களையும் பஹி
ஷ்காரத்திட்டங்களையும் நிறைவே
ற்றினீர்களா? நான் சிறைக்கோட்
டம் நண்ணும்பொழுது, 'கதர்!
கதர்!!'என்றுகதறினேனே! அத
னை உங்கள் செவியிலேற்று உண்
மைக்கதரைவிருத்திசெய்தீர்களா?
அல்லது உறங்கிக்கொண்டுதான்
இருந்தீர்களா?" என்று வினவுங்





காலை நாம்என்னபதிலிறுப்போம்?
கட்சிச்சண்டையால் காங்கரஸ் பிள
வுண்டு கலக்கமடைந்தது என்று
கழறுவோமா? நிர்மாணத் திட்ட
மும்பஹிஷ்காரத்திட்டமும்பறந்து
போயின வென்று பகர்வோமா?
உளங்குளிர வாய்திறந்து ஒருரை
வழங்குதற்கும் வழி யில்லையே!
தேசத்தீரே! தேசத்தீரே!! நமது
குருமூர்த்தியின் உரைகளை உண
ராது இவ்வளவு ஏமாற்றம் செய்
வோமானால், "நாம் எவ்வாறு இன்
னும் சுயராஜ்யம் வரவில்லையே!
வரவில்லையே!!" என்று வருந்
தலாம்? நாம் முயற்சி செய்தா
லன்றோ சுயராஜ்ய மலர் அரும்பும்.
ஆகவே அன்பர்கள் இனிமேலும்
வாளா உறங்குதல் கூடாது! கூடா
து! எல்லோரும் இன்பக்கதர் உடு
த்துதல் வேண்டும். கள்ளை ஒழி
த்தல் வேண்டும். தீண்டாமை
யைத் தேய்த்தல் வேண்டும். நிர்
மாணத் திட்டங்களையும் பஹிஷ்
காரத் திட்டங்களையும் நிறைவேற்
தல் வேண்டும். அஞ்ஞான்றே
நமது அடிகள் அகமிக மகிழ்வார்.
நமது காந்தியடிகள் உடல் முழுவ
தும் குணமடையப்பெற்று, வெளி
ப்போந்து நமக்கு வேண்டிய உப
தேசங்களையும் ஊக்கத்தினையும்
உணர்ச்சியையும் நல்குமாறு எல்
லாம் வல்ல இறைவனை வணங்கு
வோமாக! காந்தியடிகள் வாழ்க!

## பணந்தான் வேண்டும்.

——:o:——

பெண்ணுக்குப் பணம் வாங்கு
வது கூடாதென்று பலமுறை எழு
தப் பட்டிருக்கிறது. இப்படிப்
பெருந்தொகை வாங்குவதால் சமூ
கமே இற்றுப் போகுமென்பதைத்
தொண்ணூற்றுறார் நகரத்தாரே
ஒப்புக் கொண்டு இருக்கிறார்கள்.
ஆனால் நல்ல பாம்பின் விஷத்தைப்
போல் ஏறிக்கொண்டிருக்கும் இக்
கொடிய முறையை யெண்ணும்
போது நமது உள்ளம் நடுக்குறு
கின்றது. ஒரு பெண்ணுக்கு நாய
கனைத் தேடுபவர் மாப்பிள்ளையின்
குலம், குணம், ஒழுக்கம், ஆண்
மை, சாமர்த்தியம், வயது முதலி
யவற்றைக் கவனித்த லவசியமா
கும். இப்படிப்பட்ட இன்றியமை
யாதனவற்றை ஆராய்ந்து ஒப்புக்
கொண்டு கல்யாணஞ் செய்வார்கள்
பெரியோர். இதுகாலை நமது சமூ
கத்தில் இவைகள் கவனிக்கப்பட
வில்லை. பெண்ணுக்குப் பொருள்
பெற விரும்பி நிற்போர் கேவலம்
பொருளை மட்டுமே விரும்புகின்ற
னர். வேறெதையும் விரும்பவி
ல்லை. சில தினங்கட்கு முன்னர்
இங்குள்ள தமது சிநேகிதருக்கு
அடுத்த ஊரிலிருந்து ஒரு நண்ப
ரெழுதியிருக்கிற கடிதத்தில் பின்
வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கி
றது:—

"இப்பவும் தங்கள் கடதாசிப்
படி எட்டரை விராகன் வாங்கி
னால் ஒண்ணுக்கும் பத்தாது. பத்
து விராகனுக்குக் குறையப்ப
டாது. பத்து விராகன் வாங்கி
னால்தான் கலியாணச் செலவுபோ
க மிச்ச மிருப்பதைக் கடனுக்குக்
கொடுக்கலாம். வயிர நகை யொரு
சோடிப்பும் சும்மா நாளில் போட்
டுக் கொள்ளச் சிகப்பு நகையில்
ஒரு சோடிப்பும் செய்யவேணும்.
மோட்டார்கார் இருக்கிற வீடாக
விருந்தால் தேவிலை யென்று
பொம்பிளைகள் நினைக்கிறார்கள்.
வயதான மாப்பிளையாயிருந்தாலும்
மூணுந்தாரமா யிருந்தாலும் பாதக
மில்லை."

இந்தக் கடிதத்தின் நிலையை
நண்பர்கள் ஊன்றிப் படித்து அறி
வார்களாக. பெண்ணுக்குப்பணம்
வாங்குவோரின் மனப் போக்கு
எப்படி யிருக்கிற தென்பதை இக்
கடிதத்திலிருந்து நன்கு தெரிந்து
கொள்ளலாம். வயதானவராயிருந்
தாலும் சரி; பலதாரங்கொண்டிழந்
தவராயினும்சரி; பணம் நிறையக்
கிடைத்தால் பெண்ணை அவருக்கு
அர்ப்பணம் செய்யப், பெற்றவர்
விரும்புகிறார். அப் பெண்ணின்
பிற்கால வாழ்க்கை யெப்படியாகு
மென்பதைக் கவனிப்பவர்களைக்
காணவில்லை. எப்படியாவது இன்
று தொகையாகப் பணங் கிடைத்
தாற் போதுமென்ற எண்ணமே
தலை தூக்கிவிட்டது. பெற்றவரு
க்குப் பெருந் தொகை கொடுப்ப
தோடு மட்டும் அமையாது வயிர
நகை முதலியனவும் செய்ய வேண்
டியிருப்பதால் மாப்பிள்ளைகள்பாடு
பெருந் துன்பமாகவே முடிகின்
றது. இதுகாலை பெண்ணை விரும்
புகிற மாப்பிள்ளைமார்கள் படும்
பாடு கொஞ்சமல்ல. இனி ஒழுங்
கான முறையில் பணம் சம்பாதித்
துக் கல்யாணம் செய்து கொள்ள
லாமென்று கருதுதற்கு இட
மில்லை. இவ்விஷயத்தை முதலா
ளிமார் கவனிப்பாராக. கையில்
பணமில்லாத ஒருவர் சாதாரண
மாக ஒழுங்குக்குக் கட்டுப்பட்டு
சம்பளம் சாமான் வாங்கிக் கலியா
ணம் செய்து கொள்வதானால் எப்
படி முடியுமென்பதை யோசிக்க
வேண்டும். எக்கேடு கெட்டாலும்
கொழுத்த பணம் கிடைக்காவிட்
டால் கலியாணஞ் செய்வதில்லையெ
ன்று பெண்ணைப் பெற்றவர் நினைப்
பது போல மாப்பிள்ளைகளும் எப்
படியாவது பணத்தைச் சரிக்கட்ட
வேண்டுமென்று நினைக்க ஆரம்
பித்து விடுவார்களோ வென்று
அஞ்சுகிறோம். அப்படி எண்ணு
வார்களானால் முதலாளிகளின் நிலை
மை கவலைக் கிடமாகி விடும். அக்
கிரமமானது வளர்ந்து கொண்டே
செல்லுமானால் நன்மை விளையுமெ
மென்றெதிர் பார்க்க முடியாது.
சமூகமானது தற்காலம் செல்லு
கிற மாதிரியைக் கூர்ந்து கவனிக்
கும்போது பண மகப்பட்டாற்
போதும் பிறவற்றைப் பற்றி யோ
சிக்க வேண்டாம் என்ற கருத்து
மேலேறுவதுபோல் தோற்றுகின்
றது. இந்நிலை சிறிது உரம்பெறு
மானால் நமது சமூகம் சிதறிப்போ
குமென்பது திண்ணம். அப்படிச்
சிதறிப் போகுங் காலத்தில் பணக்
காரருக்குப் பலவழிகளில் பெருந்
துன்பங்களுண்டாகலாம். ஆகவே
இதுகாலை பணம்வைத்திருப்போர்
முன் வந்து ஒழுங்கு செய்வார்
களாக.

## எண்டிசைக்காட்சி.

### நல்வரவு.

தமிழ் நாட்டுத் தேசபக்த சிகாமணி
களுள் ஒருவராகிய வைத்யர் வரதராஜலு
நாயுடு அவர்கள் திருச்சி சிறையினின்
றும் நாளித் தைமீ உய-ஆந் தேதி
காலை கூ மணிக்கு விடுதலை யடைந்தார்
கள். பல தேசபக்தர்கள் திருச்சி சே
ன்று அவர்களை இனிது வரவேற்றிருக்கி
றார்கள். நம் பாரத மாதாவின் விடு
தலைக்காகப் பெரிதும் பாடுபடும் இளஞ்
சிங்க வேறுகளுள் ஒருவராகிய வரதரா
ஜலு அவர்களுக்கு நல்வரவு கூறுகிறோம்.

### அற்புதமான யோஜனை.

வங்காள் சட்ட சபையில், சில அடு
க்கு முறைச் சட்டங்களை எடுத்துவிட
வேண்டு மென்றும், அரசியற் கைதிகளை
விட்டு விட வேண்டும் என்றும் தீர்மா
னிக்கப்பட்டிருப்பது நேயர்களுக்குத்தெரி
யும். அதுபற்றி என்ன செய்வது என்று
வங்காள் கவர்ன்மெண்டார் விழித்துக்
கொண்டிருக்கின்றார்கள். ஆங்கிலோ
இந்தியப் பத்திரிகைகளுள்பட எல்லாப்
பத்திரிகைகளும் ஜனங்களின் மனப்போ
க்கை ஒருவாறாக ஆதரித்து எழுதியிருக்
கின்றன. அதற்குச் சாதகமாக மிகவா
தித்திற் பலர் ஓட்டுக் கொடுத்திருக்கிறார்
கள். ஆனால் அன்னிபெசண்ட் மட்டும் த
மது பத்திரிகையில் தாம் கைச்சார்த்திட்
டெழுதிய தலையங்கமொன்றில், 'தேசாம்
சூல் அரசாட்சி ஏற்படும் வரையில்,
கஅகஅ-ஆம் வருஷத்திய ங-வது சட்டம்

கவர்ன்மெண்டுக்குத் துணை புரிய இருக்க வேண்டுமென்று' எழுதியிருக்கிறார். அதாவது அச்சட்ட சபை செய்துள்ள தீர்மானத்தை அலக்ஷியஞ்செய்து விடவேண்டுமென்பதே அவருடைய அற்புதமான யோஜனையாகும் இந்த அற்புதமான யோஜனையைச் சொல்லுதற்கு அன்னிபெசன்ட் எத்தனை நாள் ஆராய்ச்சி செய்தனரோ? தெரியவில்லை. இதுவும் ஒரு திருவிளையாடல்!

## அனைத்தையும் அளித்தார்..

கதர் வளர்ச்சியிலேயே கண்ணுங் கருத்துமாக உழைத்துவரும் சர். பி. ஸி. ராய் அவர்கள் ஐம்பதினாயிரம் ரூபாய்கள் பெறுமானமுள்ள தமது பொருள் அனைத்தையும் கதர் வளர்ச்சியின் பொருட்டுச் சில தர்ம கர்த்தர்களிடம் ஒப்புவித்திருக்கிறார்கள் என்றறிந்து பெருமகிழ்வு எய்துகிறோம். அன்னாரின் தியாகம் பெரிதும் போற்றத் தக்கதாகும். நந் தமிழ் நாட்டில் இத்தகைய உண்மைத் தொண்டர்கள் எப்பொழுது தோன்றுவார்களோ? தமிழணங்கே! இத்தகைய தியாகிகளைத் தோற்றுவிப்பாயாக!

## உள்ளூர்ச்செய்தி.

பிளேக்:—ஊரில் சில பாகங்களில் பிளேக் பரவிவருவதாகவும், இவ்வாரம் இறந்தவருட் சிலர் பிளேக் நோயினாலேயே இறந்திருக்கிறார்களென்றும் சொல்லிக்கொள்ளப் படுகிறது. உடனே உள்ளூர் சுகாதார அதிகாரிகள் கவனித்து வேண்டுவன செய்ய வேண்டும். மதுரையில் பிளேக் பரவி வருகிறபடியால், மதுரையிலிருந்து இங்குவரும் பிரயாணிகளைத் திருப்புத்தூரில் ராடிப் பரீக்ஷைசெய்து அனுப்பும்படி செய்தல் வேண்டும்.

சந்தோஷவிழா:—காந்தியடிகள் விடுதலையடைந்தது குறித்துச் சந்தோஷ விழா இனிது கொண்டாடப்பட்டது. அடிகள் திருவுருவத்தை ஒரு டேக்காட்டில் வைத்து அலங்கரித்துப் பக்தர்கள் ஊர்வலமாகக் கல்லுக்கட்டியைச் சுற்றி இழுத்துக்கொண்டு வந்தனர். பல அன்பர்கள் தேசியகீத பாராயணஞ்செய்து கொண்டுவந்தார்கள். கற்கண்டு வாழைப்பழம், சர்க்கரை முதலியன ஏராளமாக வழங்கப்பட்டன.

ஹிந்துமதாபிமான சங்கம்:—சாளித்து தைமீ கஅ, ககூ, உகஆந் தேதிகளில் நாகை ஸ்ரீராஜாராம் பாகவதரவர்களால் காந்தியடிகள் சரித்திரம் கதாரூபமாக இன்னிசைக் கருவிகளோடு இனிது நடைபெற்றது. மூன்று நாளும் இருபாலருமாக ஏராளமான ஜனங்கள் வந்திருந்தார்கள். கதை கேட்கக் கேட்க இன்பந்தந்து கொண்டிருந்தது. பாகவதரவர்களுடைய திறமை அளவிடற்கரியதன்று. இவ்வாறு பாகவதர் அவர்கள் எல்லா இடங்களினும் இக்கதையினை இலவசமாக நடத்திவருவது குறிப்பிடத்தக்கது. கடைசி நாளில் பாகவதரவர்களுக்குச் சங்கத்தார் பொற்சங்கிலியோடு இணைத்த ஒரு பதக்கத்தினை இனமளித்தார்கள்.

## வைசிய நாட்டுச்செய்தி.

ஜெயங்கோண்டபுரம்:-நேற்று காந்தியடிகள் விடுதலையடைந்ததின்பொருட்டு இன்று பல ஏழைகளுக்கு ஸ்ரீமாந் மெ. ராம. மெ. மெய்யப்பச் செட்டியாரவர்கள் அன்னமளிக்கிறார்கள்.

சீனமங்கலம்:—முன்னர்க் குறிப்பிட்டிருந்தபடி, இவ்வூரில் உருதிக் கோட்டை வட்டகை உபதேசம் நாளிது தைமீ உசூஉ நடைபெறுகிறது. வேலைகளெல்லாம் மும்முரமாக நடந்து கொண்டிருக்கின்றன என்று பனைக்கரை வீர. அ. ச. ராமநாதன் செட்டியார் அறிவிக்கிறார்.

சிவநேசர் திருக்கூட்டம்:—சிவநேசர் திருக்கூட்டத்தார் கும்பாபிஷேகத்தை முன்னிட்டு அழகாபுரிக்கு நாளிதுதைமீ உஅஉ விஜயம் செய்து சிவத்தொண்டு புரிவார்கள். மாசிமகோற்சவத்தை முன்னிட்டு கல்லலுக்கு மாசிமீ உஉ சென்று சிவத்தொண்டு புரிவார்கள் என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

கண்டனூர்:— இவ்வூர்த்தமிழ் வித்தியாசாலையின் இரண்டாவது ஆண்டு நிறைவுவிழா நாளிது தைமீ உஎஉ சனிக்கிழமை நடைபெறும்- அன்று காலையில் அப்பூதியடிகளுயனார் குருபூஜையும் பிற்பகலில் பல அறிஞர்களுடைய உபந்யாசங்களும், மாணவர்களுடைய சிறு சொற்பெருக்குகளும், கதாரூபமாக நடக்கப்பெறும் பிட்டுக்கு மண்சுமந்த திருவிளையாடலும் நடைபெறும் என்று சிவநேசர் நா. நா. அரு. காசிவிஸ்வநாதன் செட்டியார் அறிவிக்கிறார்.

பள்ளத்தூர்:— இவ்வூரில் ராவ்பகதூர் அ. மு. மு. முருகப்ப செட்டியாரின் பெயரால் கட்டப்பட்டுள்ள வைத்தியசாலையின் திறப்புவிழா தைமீ கசஆம் தேதி மாலை நடைபெற்றது. ராமநாதபுரம் ஜில்லா கலெக்டர் ராவ்பகதூர் வி. டி. கிருஷ்ணமாச்சாரியார் மேற்படி வைத்தியசாலையைத் திறந்து வைத்தார். இவ்வைத்தியசாலை ரூ. எ0000 செலவு செய்து கட்டப்பட்டது. இதை சாசுவதமாக நடத்தி வருவதற்கும் ரூ. ௫0000-ம் எடுத்துவைக்கப்பட்டிருக்கிறது. இவ்வைபவம் நன்கு அலங்கரிக்கப்பட்ட கொட்டகையில் நடந்தது. இதற்குப் பிரபலஸ்தர்கள் பலர் வந்திருந்தனர்.

## கப்பற்செய்தி.

"எரின்புரா" கப்பல் ரெங்கூனுக்கு தைமீ உஉஉ சென்னைக்கு வந்தது. உசூஉ வெள்ளிக்கிழமை ரெங்கூனுக்குப் பிரயாணமாகின்றது. மலாய் நாட்டிலிருந்து 'டீஸ்டா' கப்பல் தைமீ ௩0உ சென்னைத்துறைமுகத்திற்கு வந்துசேரும்.

## தந்திச்செய்தி.

பினுங்கு தைமீ உஉஉ

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | கசுச-0-0 |
| சயம் விலை | கஉ௫-0-0 |
| ரப்பர் விலை | சுசு-0-0 |

(த. வை. ஊ.)

ரேங்கூன் தைமீ உஉஉ

| | |
|---|---|
| பெரிய ஆலை அரிசி | சஎ0-0-0 |
| சிறிய ஆலை அரிசி | ௫00-0-0 |
| மீடோன் | ௫க௫-0-0 |
| படகு நெல் | கஅஎ-0-0 |
| ரயில் நெல் | கஅ௫-0-0 |
| வெள்ளை பீன்ஸ் புதிது | உச௫-0-0 |
| ஷை பழசு | உக௫-0-0 |
| சிகப்பு பீன்ஸ் | உக்எ-அ-0 |
| கடலை | உஎ0-0-0 |
| துவரை | ச௫0-0-0 |
| பாசிப்பயறு | ௫சு0-0-0 |
| காராமணி | ௩க0-0-0 |
| உண்டியல் விலை | கசுக-அ-0 |
| பொற்காசு (பவுன்) | கசு-ச-சு |
| நடப்பு வட்டி | 0-க௫-சு |

(பணம் சவுதம்.)

## கடைத்தெரு

### லண்டன்.

தைமீ உ0உ

| | |
|---|---|
| பாரா ரப்பர் | பன்னிரண்டேகால் பென்ஸ். |
| பித்தளை | ஏழேமுக்காலேவீசம் பென்ஸ். |
| செம்பு (முதல்தரம்) | £ சுசு-௫-0 |

### பம்பாய்.

தைமீ உ0உ

| | |
|---|---|
| இங்கிலீஷ் பார் தங்கம் | உ௫-கஉ-0 |
| முதலாவது செட்டில் மெண்டு | உ௫-கூ-௩ |
| இங்கிலீஷ் பார் வெள்ளி | எகூ-கச-0 |
| முதல் செட்டில் மெண்டு | அ0-உ-0 |
| பாங்கித்தந்தி நாணயமாற்று | ஒருஷில்லிங் ஐந்தேமூன்றுவீசம்அரைவீசம் பென்ஸ். |

### சென்னை.

தைமீ உஉஉ

லண்டன் நாணயமாற்று தந்தி மூலம் ரூபா ஒன்றுக்குப் பதினாறேமுக்காலே மூனுவீச மரைவீசம் பென்ஸ்.

| | |
|---|---|
| இம்பீரியல் பாங்கிவட்டி | 8 % |
| இங்கிலாந்து பாங்கி வட்டி | 4 % |
| இம்பீரியல்பாங்கிபங்குவிலை | த௩-ச௫ |
| ஷை (கஉ௫ செலுத்தப்பட்டது) | ௩௩0 |
| பொற்காசு (பவுன்) | கசு-உ-சு |
| வெள்ளி ரூபாய் இடைக-க்கு | 0-க௩-௩ |

### உள்ளூர்.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | 0-அ-0 |
| ரெங்கூன் உண்டியல் ஷை | க-அ-0 |
| பவுன் விலை | கசு-௩-0 |
| வெள்ளி ரூபாய் இடை | 0-க௩-சு |



## எந்த வழியில் செய்தல் வேண்டும்?

நம் தன வைசியர்கள் தருமம் செய்வதில் தலைசிறந்தவர்கள் என்பதுண்மையே. ஆனால் காலத்துக்கேற்றவாறு தருமங்கள் செய்யப்படுகின்றனவா என்பது ஒரு கேள்வி. கோவில்கள் கட்டுவது வெள்ளி ரதங்கள், வெள்ளி வாகனங்கள் செய்து வைப்பது முதலியன நல்ல தருமங்கள் என்கிறார்கள். அவைகளைச்செய்கிறார்கள். அதை நான் மறுக்கவில்லை. ஆனால் தற்காலத்தில் அவைகள் தானா செய்யப்படவேண்டியனவாயிருக்கின்றன என்பதைக் கவனிக்க வேண்டும். தற்காலத்தில் நம் நாட்டில் பல கோவில்கள் இருக்கின்றன. ஆனால் சுவாமி தெரிசனத்துக்குச் செல்வோரையே அதிகம் பார்க்கமுடியவில்லை. காரணம் தெய்வ பக்தியும் தெய்வ நம்பிக்கையும் மத உணர்ச்சியும், கல்வி அறிவும் குறைந்திருப்பதேயாகும். இவைகளையே நாம் வளர்ப்பதற்கு முற்பட வேண்டியவர்களாயிருக்கிறோம். பசியால் வருந்தும் ஒருவனுக்கு அன்னமளிக்காது ஆடையளிப்பது சரியாகுமா? நமது ஹிந்து சகோதரர்களில் அநேகர் கிறிஸ்தவர்களாவதை நாம் பார்த்துக்கொண்டிருக்கிறோம். காரணமென்னை? நம் மதத்தில் உண்மைகள் கிடையா என்பதை அவர்கள் உணர்ந்ததினாலேயா? அல்லது கிறிஸ்தவ மதத்தின் தத்துவங்களை நன்கு உணர்ந்ததினாலேயோ? இல்லை! இல்லை!! நம் மதத்தின் உண்மைகளை நன்குணர்ந்த ஒருவர் ஒரு நாளும் வேறு மதத்தைப் பின்பற்ற ஒருப்படார். ஆகையால் மதப்பிரசாரங்கள் ஆங்காங்கு செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும். நம்முடைய அஜாக்கிரதையாலேயே ஏனையமதத்தினர்நம்சகோதரர்களை அவர்கள் வழிக்கு இழுக்கயிடமேற்படுகிறது. தாழ்ந்த ஜாதியார் என்று ஒரு வகுப்பாரை நம்மதத்தினர் தள்ளிவைத்திருக்கின்றனர். அவர்கள்ஏனைய மதங்களுக்குச்சென்றுவிட்டால் சமஅந்தஸ்த்து உரிமைகள் கொடுக்கப் படுகின்றனர். ஆகையால் நாம் தீண்டாமையை ஒழிக்க முற்படவேண்டும். இன்னும் வைத்தியசாலை, கல்விச்சாலை, தொழிற்சாலை முதலியன வைத்தும் நம் மதத்தைப்பின் பற்றும் ஏழைகளைத்தங்கள் தங்கள்மதத்தில் சேர்த்துக் கொள்ளுகிறார்கள். ஆகையால் இவைகளைநாம்செய்து நம்மதத்தைக் காப்பாற்ற முற்படவேண்டியது அவசியம்.

அ. வே. தியாகராஜா.

## நமது பலசரக்குக்கடை.

அஞ்சாநெஞ்சன் எழுதுகிறார்:—

ஆஹா! என்னஷோக்! எவ்வளவு முறுக்கு! வந்துவிட்டான் சித்திரசேனன்! கலியாணம் கலியாணம் என்று கதறுகின்றனர். கூட்டத்திற்கு முந்திக் கலியாணக் கதை வேறு! இப்போது நடக்கிற திருவிளையாடல் வேறு. இரண்டுக்கு மிடையில் கிடந்த அடக்கம் வேறு. குடியைக் குடியாக்க உலகத்திலே கலியாணம் நடக்கிறது வழக்கம். தருமப் பிரபுக்களான நாட்டுக்கோட்டையார் சாதியிலே முப்பது நாற்பதாயிரம் உள்ளவரை மொட்டையடிக்க வேண்டுமானால் கலியாணஞ் செய்ய முயற்சிக்கவேண்டும். அதோடு அவன் தொலைந்து போவான். கலியாணம் என்று சொன்னால் ஏதோ ஒருவன் தலையிலே கையை வைக்கிறதாகவே எனக்குத் தோற்றுகின்றது. பழய காலத்திலே வாங்கிச் செய்பவனைக் கண்டால் போதும்! அவனைச் சுட்டிக்காட்டி "இவன் வாங்கிச் செய்தவன்" என்று ரகசியமாகப் பேசிக்கொள்வது வழக்கம். இதற்காக வெட்கப்பட்டு வாங்கிச் செய்கிற புத்திமான்கள் கூட்டங்களுக்கு வரமாட்டார்கள். வாங்கிச் செய்வது பெரிய அவமானமான காரியமென்றே எல்லாருங் கருதினார்கள். வரவர மாமி கழுதைபோலானாள். இப்போது பணம்! பணம்! பாழாய்ப்போன பணப் பிசாசு பிடித்தாட்டுகிறது. மான மரியாதை ஒழுங்கு பாவபுண்ணியம் முதலிய எதுவும் இந்தப் பணப் பயித்தியம் பிடித்த மனிதர் கண்ணுக்குத் தோற்றவேயில்லை. இப்போது எல்லாம் அடங்கி ஒருவழியாகத் திரும்பிவிட்டது. பழய காலத்துப் பயித்தியக்காரர்கள் கலியாணஞ் செய்த கதையே வேறு! தாம்வேண்டும், குலம் வேண்டும், மாப்பிள்ளையின் நரம்பில் பலம் வேண்டும், ஆண்மைத்தன மிருக்கவேண்டும், என்று தேடிப் பார்த்து இருபத்தைந்து வயதுக்கு மேற் கலியாணம் செய்வார்கள். இப்பொழுது 'எல்லாம் பொருளிற் பிறந்து' விடுகிறது. 'பெண்ணைச் செய்கிறீர்களா?' என்றால் 'பணமெவ்வளவு' என்ற பதில் தான் வருகிறது. பத்து வராகன் ரொக்கங் கொடுத்துவிட்டு வயிர நகை செய்து குடியை மொட்டையடிக்கவந்த முத்து ரத்தினத்துக்குப் பாதாதி கேசம்வரை பூட்ட வேண்டும். இதற்குச் சம்மதித்தால் முடிந்தது கலியாணம். மாப்பிள்ளையைப் பற்றிக் கவலையில்லை. வயது ஏழெட்டாயிருந்தாலும்சரி; பல்லுப்போன பழம் பெருந்தாத்தாவாய் இருந்தாலும் சரி, எட்டாந்தர மானாலுஞ்சரி; நூறு பெற்று ஆயிரத்துக்கு எழுதிக் கொடுத்துவிட்டுச் சூதுக் கடையிலும் வேசி வீட்டிலும் விளையாடி நிற்பவனாயினும் சரி; அங்கமெல்லாங் குறைந்து அழுகுகின்ற தொழு நோயாளியாயினும் சரி; அங்கவீனனாயினும் சரி மாப்பிள்ளை எவ்வளவு மட்டமோ அவ்வளவுக்குப் பெண்விலையை ஏற்றிக்கொள்ள வேண்டியது. பெண்ணுக்கு ஏதாவது குறைந்தால் சிறிது குறைத்துக்கொள்ளலாம். கலியாணப் பேச்சில் வீடுவாசல் குலங் கோத்திரம் நல்லவர் பெரியவர் நியாயம் நெறி முதலிய கதைகளைப்பற்றிய அத்தியாயங்கள் தள்ளப்பட்டுவிட்டன. பணம் வயிர நகை முதலிய அத்தியாயங்கள் தான் மிச்சமிருக்கின்றன. கலியாணப் புராணத்தை அவிழ்த்தால் இந்த அத்தியாயங்கள்தான் விருத்தியுரையோடு விளங்குகிறது. இல்லாதவன் பொல்லாதவன்தான் முந்திப்பணம் வாங்குவானென்று சொல்வார்கள். இப்போது படேபடே ஆசாமிகளெல்லாம் 'வாங்க ஆரம்பித்து விட்டார்கள். மலாய் நாட்டிலே கற்பகாரம் படுத்துக்கொண்டு எழுந்திருக்க முடியாதென்கிறது. பர்மாவிலே நெல் விலை யேறவில்லை. முதலாளியாயிருந்தால் கூட்டாளியிடம் அகப்பட்டு விழிக்கவேண்டியிருக்கிறது. கூட்டாளியாகப் போனால் முதலாளியிட மகப்பட்டுக் கொண்டு அவதிப்பட வேண்டியிருக்கிறது. கையினாலே இந்தத் தொல்லைக்குப் போகவேவேண்டாம். கைப்பழத்தைவிட்டுவிட்டுத்தொறட்டிப்பழத்துக்குத் தொண்ணூந்திருப்பானேன்! பெண்ணுக்குப் பணம் வாங்குவது தான் பச்சை வாழைப்பழம் சாப்பிடுகிற மாதிரியாய் விட்டதே. வலியவந்த சீதேவியைத் தள்ளுவார்களா? நல்ல நாளையில் ஒரு கணக்கு மிச்சம். இனம் புனமுமல்ல. நிலமும் பலமுமல்ல. விளக்கடிப்பணம்! நோட்டு! எண்ணிக் கையிலே வாங்கிக் கொண்டு தான் திருப்பூட்டுகிறது. மதராஸ் உண்டியலாகக் கூட இல்லை. இதை மனிதன் விடுவானா? எவ்வளவு பெரிய பணக்காரனும் வாங்கித் தட்டுகிறான். ஆனால் 'பெண்ணின் பேரால் எடுத்துவைக்கிறது கடதாசி கேட்கப்படாது' என்று ஒரு முக்காடு போட்டுக்கொள்ளுகிறார்கள். 'வெட்கமுங்கெட்டு வெளிப்பட்ட மூளிக்கு முக்காடு எதுக்கடி' என்று நான் கேட்கிறேன்.

## குமரன்—வாரப் பதிப்பு.

—(oo)—

புதன்கிழமை தோறும் வெளிவருகிற
ஒரு வாரப் பத்திரிகை.

வருஷ சந்தா விபரம்.

| | |
|---|---|
| உள்நாட்டுக்கு | ரூ. ௩—0—0. |
| வெளி நாடுகட்கு | ரூ. ௪—0—0. |
| தனிப்பிரதி | ரூ. 0—௧—0. |

விளம்பர விகிதம்.

மாதமொன்றுக்கு பத்தி ௧-க்கு ரூ. ௨0-0-0,
ஷை அரைக்கு ரூ. ௧௧-0-0.

## குமரன்—மாதப்பதிப்பு.

வருஷ சந்தா விபரம்.

| | |
|---|---|
| உள் நாட்டுக்கு | ரூ. ௩—0—0 |
| வெளிநாடுகட்கு | ரூ. ௩—௮—0 |
| தனிப்பிரதி | ரூ. 0—௪—0 |

எப்பொழுது சேர்ந்தாலும் வருஷ ஆரம்பமான சித்திரை மாதத்திலிருந்து கணக்குவைக்கப்பெறும். அது முதல் சஞ்சிகைகளும் அனுப்பப்படும்.

விளம்பர விகிதம்.

மாதம் ஒன்றுக்கு பக்கம் ௧-க்கு ரூ ௧0—0—0.
ஷை அரைக்கு ரூ ௫—0—0.

மானேஜர்—குமரன் ஆபீஸ், காரைக்குடி.

சொ. முருகப்பசெட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி "குமரன்" அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

